REGD No. TN MS (C) 244 ANNA Leading Progressive Tamil Daily of the People (MADRAS) Phone 812818 4 பக்கம் விலை 35 காசு

நல்லறிவு

நாட்டில் நல்லறிவு பரவினுல் தான் அடிப் படை பலமாக இருக் கும்.

-பேரறிஞர் அண்ணு

# அண்ணு

நிறுவனர்: எம்.ஜி.ஆர்

மொழி

எந்த ஒரு மொழி யின் சிறப்பும் பெரும் பாலும் அம்மொழி யின் மூலம் அறியக் கிடைக்கும் கருத்துக் களைப் பொருத்துத் தான் இருக்கும்.

மலர்: 4 சென்னை 3 9 80 புதன் (★) ✻✻✻ (★) வெளியீடு: 4 9 80 வியாழன் இதழ் 296

பொருளாதார ஏற்றத்தாழ்வுகளை களைந்தெறிய முன்வரவில்லையாம்

## இந்திரா காந்தி அரசு மீது

# கருணநிதிதிடீர்தாக்கு

## வன்முறைக்கு பகிரங்க ஆதரவு

சென்னை, செப். 3- பொருளாதார ஏற்றத்தாழ்வு களைக் களைய மத்திய மாநில அரசுகள் முன் வரவில்லை என்று கருணநிதி எழுதி இருக்கிருர். இந்திராகாந்தி அரசை இது வரை தாக்கி கருத்துக் கூருத கருணநிதி நக்சல்பாரி வனமுறைப் பிரச்சினையை வைத்துக் கொண்டு முதல் தடவையாக பிரதமர் இந்திராகாந்தியை பகிரங்கமாகக் கண்டித்துள்ளார்.

அதிதீவிரவாதம் என்ற பெயரில், பொது மக்களில் சிலரை கொலை செய்வதும் கொள்ளை அடித்துப் பிறர் சொத்துக்களை அபகரிப்பதுமான காரியங்களை ஒடுக்கிப்பொது மக்களுக்குப் பாதுகாப்பு அளிப்பதில் மத்திய மாநில அரசுகள் தீவிரமாகஈடுபட்டுள்ளன.

இதுபற்றி கருணநிதி தமது குடும்ப ஏட்டில் எழுதியுள்ள கட்டுரையில் "பொருளாதார ஏற்றத் தாழ்வுகளைக்களைந்தெறிய மத்திய மாநில அரசுகள் முன்வரவில்லை" என்று குற்றம் சாட்டியுள்ளார்.

பிரதமர் இந்திராகாந்தி அரசை இதுவரை தாக்கிப் பேசாத கருணநிதி முதல் தடவையாக சந்தடிச் சாக்கில் கடுமையாகத் தாக்கி இருப்பது குறிப்பிடத் தக்கது.

வன்முறையை ஒடுக்கு கிருேம் என்றுகூறி மேலும் வன்முறை கட்டவிழ்த்து விடப்படக் காரண கர்த்தாக்களாக இருப்ப தில் எந்தப் பயனுமில்லை என்றும் கருணநிதி எழுதி இருக்கிருர்.

மத்திய-மாநில அரசுகள் வன்முறையை ஒடுக்கினல் மேலும் வன்முறை கட்டவிழ்த்துவிடப்படவேண்டும் என்ற கருத்தைப் பிரதிபலித்து கருணநிதி எழுதி இருப்பது இந்திராகாங்கிரஸ் வட்டாரத்திலும் பெரும் அதிர்ச்சியை ஏற்படுத்தியுள்ளது.

வன்முறை மூலம் ஆட்சி கவிழ்ப்புக்கு ஊக்கம்தரக் கூடாது என்று முதல்வர் புரட்சித்தலைவர் கூறிய கருத்துக்கு பிரதமர் இந்திராகாந்தி ஆதரவு அளித்திருப்பது குறிப்பிடத்தக்கது. கொலை, கொள்ளை போன்ற வன்முறைகளுக்கு லஞ்சக் கோடீஸ்வரர் கருணநிதி ஆதரவு அளித்திருப்பது சமூகக் கேடுகளுக்கு- சமூகப் புற்றுநோய் ஆதரவு அளிப்பது போல் உள்ளது என்று இ காங்கிரஸ் வட்டாரத்தில் தப்படுகிறது.

## கலவர பகுதியில் துப்பாக்கிச் சூடு

கோவை, செப். 3- பொள்ளாச்சி தாலுகா ஆனைமலையில் கலவரக் கும்பல் மீது போலீசார் துப்பாக்கியால் சுட்டனர் இதில்3 பேர் இறந்தனர் 13 பேர் படுகாயமுற்றனர்.

## ப.உ.ச. கடிதம்

## தமிழ் பிறந்த நாள்!

பேரன்புடையீர்!

உங்களுக்கு எழுதத் துவக்கும்போது தொலை காட்சியில் செய்தி படிப்பவர் "கண்ணன் பிறந்தநாள் நாடெங்கும் சிறப்பாகக் கொண்டாடப்பட்டது" என்று படித்தார்!

கிருஷ்ண ஜெயந்தி-கண்ணன் பிறந்த நாளாக மாறியிருக்கிறது!

மறுமலர்ச்சி அடைந்து வரும் தமிழ் ஆன்மீகத் துறையிலும் மாற்றத்தைத் தோற்றுவித்திருக்கிறது போலும்,

மணிப்பிரவாள நடைத் தமிழ்தனை மாற்றிய பெருமை மறைமலை அடிகளுக்குண்டு!

மறைமலை அடிகள் தமிழ் கடினமானது. எளியோர் எளிதில் புரிந்துகொள்ளக் கூடியதாக இல்லை. தமிழ்த் தென்றல் திரு வி. க, தமிழ் கொஞ்சம் அதனை இளகச் செய்தது தந்தை பெரியார் அதனை கொச்சைத் தமிழாக்கினர்.

அந்தக் கொச்சைத் தமிழ்தனக்கு புதிய மெருகு சேர்த்து தேன் தமிழாக மாற்றிய பெருமை நமது பேரறிஞர் அண்ணு அவர்களையே சாரும்!

அறிஞர் அண்ணு அவர்கள் பெற்ற ஆங்கில அறிவை தமிழ் வளர பயன்படுத்தினர். தமிழுக்கு உயிரோட்டம் உண்டு என்பதை அவர் பேணவும் நாவும் நிரூபித்துக் காட்டின!

நாதம் கலந்த குரல்- வாதத்திற்கு வலுவூட்டும் வார்த்தைகள்-வார்த்தைகளை வைத்து விளையாடிக் காட்டும் புதிய முறைகள்-அலுப்பு தட்டாத கற்பனைகள்-தேன் மழையோ, தெள்ளமுதோ, கற்கண்டோ, கனிச்சாறோ, தமிழ்ப்பாகோ, காவிரியில் நீந்தி கரையினில் விளையாடும் பூங்காற்றோ என்று கேட்டோர் மதிமயங்கி நிற்கச் செய்யும் அற்புதங்களைப் படைத்த மாமேதை!

புத்தக உருவிலும், புலவர்களிடையிலும் வித்தைகள் செய்து வந்த தமிழை, சந்து முனைக்குக் கொண்டு வந்து, வாழ்வில்லை இனி என்றிருந்தோருக்கு ஏனில்லை எனக் கேட்கும் தெம்பைத் தந்தது யார்?

"தெலுங்குக் கீர்த்தனைகள் பாடினல்தான் கச்சேரி எடுபடும் என்றிருந்தோரைப் பார்த்து- மூவேந்தர் அவையில் இசை விழா இருந்திருக்காதா? இருந்திருந்தால் என்ன மொழியில் பாடியிருப்பார்கள்" என்று கேட்டு தமிழிசைச் சங்கம் தோற்றுவிக்க தைரியம் தந்தது யார்?

"கோட்டைகளையும் பாழடைந்து கிடக்கும் அகழிகளையும் காட்டி அவைகள் வீரர்கள் வாழ்ந்தனர் என்பதற்கு சாட்சிகளல்லவா? அவ்வீரர்களின் விளையாட்டுகளைக் கூறும் வைர வரிகளல்லவா புறநானூறு பாடல்கள்! அவர்களின் பெருமை தெரிகிறது. வீரம் மிளிர்கிறது-ஆனல் கோர்வையான வரலாறு இல்லாது போனது ஏன்?" என்று வினவியது யார்?

கல் தோன்றி மண் தோன்ருமுன் தோன்றிய மூத்தக் குடிக்குச் சொந்தக்காரர்கள் நாம்! மூத்த மொழி- முதிர்ச்சியடைந்த மொழி- நாம் பெருமையடையத்தக்க அரிய நூல்களைப் புலவர்கள் யாத்த மொழி-அழியாத அறங்களைச் சொல்ல- பொய்யா மொழிக்கு உதவிய மொழி - இம்மொழியில் சிலம்பொலிக்கும்-ஒலிக்கும் சிலம்பில் நம் வீர வரலாறு கலந்திருக்கும் - அக்கலவை முக்கனிச்சாற்றினைவிட தேன், பாகு. அமுது கலவினைவிட பன்மடங்கு இனிக்கும் என்று கூறி ஏழை எளியோர், கல்லாதோர் கேட்கும் வேறு வழி இல்லாதோர் அனைவரும் பருக அள்ளித் தந்த வள்ளல் பேரறிஞர் அண்ணுவன்ருே!

தமிழுக்குப் பெருமை சேர்த்தோர் வேறு பலரில்லையா என்ருல், உண்டு! மறுக்கவில்லை-மறைக்கவில்லை-ஏன், மறக்கவுமில்லை! ஆனல் தமிழமுதை தெருவெல்லாம் தவழவிட்ட பெருமை, பெரியாரின் பகுத்தறிவுக் கொள்கையைத் தேன் தமிழில் குழைத்துத் தந்த ஈடு இணையற்ற ஆற்றல்-வேறு யாருக்குச் சொந்தம்?

புலவர்கள் மட்டுமே சுவைத்துக்கொண்டிருந்த அதனை- எளியோரும் எளிதில் புரிந்துகொள்ளும்

(2 ம பக்கம் பார்க்க)

முதல்வர் புரட்சித் தலைவரிடம் மதுரை மாநகராட்சியின் புதிய மேயர் பால கிருஷ்ணனும் துணை மேயர் நவநீதகிருஷ்ணனும் வாழ்த்துப் பெற்றனர்.

## நாட்டு நலன் கருதி செய்திகளை வெளியிடுக: முதல்வர் வேண்டுகோள்

சென்னை, செப். 3- நாட்டு நலன் கருதி எச்சரிக்கையாக செய்திகளை வெளியிட வேண்டும் என்று பத்திரிகையாளர்களுக்கு முதல்வர் புரட்சித்தலைவர் வேண்டுகோள் விடுத்தார்

இந்திய உழைக்கும் பத்திரிகையாளர் சம்மேளனத்தின் மாநாடு கொச்சியில் நடந்தது.

அந்த மாநாட்டில் கலந்து கொண்டு விட்டுத திரும்பிய உழைக்கும் பத்திரிகையாளர்சங்கபிரதிநிதிகளுக்கு முதல்வர் நேற்று பிற்பகல் விருந்து அளித்தார்.

விருந்துக்குப்பிறகு பத்திகையாளரிடையே முதல்வர் புரட்சித் தலைவர் கூறியதாவது:

உங்களை எல்லாம் ஒவ்வொருவராக நேரில் சந்திப்பது என்னுல் முடியாத நிலையில் அவ்வளவு மைல்களுக்கு அப்பால் இருக்கிறீர்கள்.

ஆகவே அத்தனை பத்திரிகையாளர்களையும் ஒன்ருக ஒரே இடத்தில் சந்திப்பதில் மகிழ்ச்சி அடைகிறேன்.

பத்திரிகைகளைப் பற்றி பேசும்முன்பு அந்தப் பத்திரிகைக்கு மதிப்பைத்தேடித் தரும் ஆசிரியர்கள், செய்திகளை சேகரித்துத்தரும் நிருபர்கள், ஆராய்ந்து அறிவார்ந்த கட்டுரை தீட்டுபவர்கள், இவர்கள்தான் பொறுப்பு என்பதை உணர்ந்தவன் என்ற நிலையில் என் கருத்தை வெளியிடுகிறேன்.

### நன்மை செய்தால் நன்மை

ஏதாவது ஒரு தொழிலில் இருப்பவர் நன்மை செய்தால் அந்தத் தொழிலில் இருக்கும் அத்தனை பேர்களுக்கும் நன்மையாக இருக்கும்.

அதே போல ஒருவர் தவறு செய்தால் அந்தத் துறைக்கே கெட்ட பெயர் ஏற்படும்.

இந்தியத் துணைக் கண்டத்தில் ஒருதாழ்வு ஏற்படுமானல் அந்தத் தாழ்வு ஏற்படக் காரணமான தனி மனிதனை யாரும் குறிப்பதில்லை. இந்தியத் துணைக் கண்டம் முழுவதையும் தான் சொல்வார்கள்.

அதுபோல ஒரு பத்திரிகையில் நன்மையான சிறப்புச்செய்தி வந்தால் அந்தப் பெருமை முதலில் அந்தப் பத்திரிகைக்குத் தான் கிடைக்கும்.

பிறகுதான் அந்த சிறப்புச் செய்தியைத் தந்த பத்திரிகையாளருக்குப் போகிறது.

பத்திரிகை நண்பர்கள் எவ்வளவுதான் தியாகம் செய்து செய்தியைக்கண்டு பிடித்து இருந்தாலும் முதலில் அந்தப் பெருமை அவருக்குக் கிடைப்பதில்லை.

அதன் விளைவு, பலன் அவர்களுக்கு உடனடியாகக் கிடைக்காமல் போனலும் அந்தநல்ல செய்தியால் நாட்டுக்கு நன்மை ஏற்படுகிறது.

### பொய்ச்செய்தி வேண்டாம்

அதேபோலத்தான் தவருன செய்திகள், உண்மைக்குப் புறம்பான செய்திகள், தீமையைஉண்டாக்குவதாக இருந்தால் அந்தச் செய்திகள் மக்களிடம் பீதியையும்,

(2-ம் பக்கம் பார்க்க)

## காஞ்சிபுரத்தில் அண்ணு இல்லம்: ஜனதிபதி சஞ்சீவரெட்டி திறக்கிருர்

சென்னை, செப். 3- காஞ்சிபுரத்தில் அண்ணு நினைவு இல்லத்தை வருகிற 16-ந் தேதி ஜனதிபதி சஞ்சீவரெட்டி திறந்து வைககிருர்.

காஞ்சிபுரம் வரகுவாசல் தெருவில் அமைந்துள்ள அண்ணு பிறந்த வீட்டைத் தமிழக அரசு ரூ 2 லட்சத்திற்கு வாங்கி அதை அண்ணு நினைவு இல்லமாக மாற்றிவருகின்றது.

இதற்கான கட்டிட சீரமைப்புவேலைகளை தீவிரமாக நடந்து வருகிறது.

இந்த நினைவு இல்லத் திறப்புவிழா வருகிற 16ந்-தேதி காஞ்சிபுரத்தில் நடைபெறுகிறது. இவ்விழாவில் ஜனதிபதி சஞ்சீவரெட்டி கலந்து கொண்டு அண்ணுநினைவு இல்லத்தை அன்று மாலை 5 மணிக்குத் திறந்து வைக்கிருர். விழாவிற்குத் தமிழக முதல்வர் புரட்சித்தலைவர் தலைமை வகிக்கிருர். மாவட்ட ஆட்சித் தலைவர் முத்துசாமி வரவேற்று பேசுகிருர்.

அண்ணு நினைவு இல்லத்தில் அண்ணு பயன்படுத்திய மேஜை, நாற்காலி, பேணு, மூக்குக்கண்ணுடி, பொடி டப்பா, புத்தர் காந்தி வள்ளுவர் சிலைகள், அண்ணு அணிந்திருந்த காலணிகள் ஆகியவை பார்வைக்கு வைக்கப்பட்டிருக்கும். மேலும் அவர் எழுதிய நூல்களும் அங்கு பார்வைக்குவைக்கப்படும்.

இதற்குமுன்பு 15-ந்தேதி மாலை 5 மணிக்கு அண்ணு போலீஸ் விளையாட்டு மைதானத்தில் வீரச் செயல் புரிந்த போலீசாருக்கு அண்ணு பதக்கம் வழங்கும் விழா நடைபெறுகிறது.

இவ்விழாவில் தமிழக முதல்வர் புரட்சித்தலைவர் கலந்துகொண்டு வீரச் செயல் புரிந்த போலீசாருக்கு அண்ணு பதக்கம் வழங்குகிருர்.

## நடத்தித்தான் பாரேன்!

பெரிய போராட்டம் நடத்தினல் உங்களால் தாங்கிக் கொள்ள முடியுமா?

-கருணநிதி கேள்வி

நடத்தித்தான் பாரேன்! உன்னுடைய மிரட்டலுக்கு பயந்தவர்களா நாங்கள்? 'ஒரே ஒரு நாள் என்னைச் சிறையில் வைத்துப்பார்' என்று முன்பு கொக்கரித்த கருணநிதியே-

உன்னை ஒரு மண்டலம் கம்பி எண்ண வைத்தோமே.... உன்னுல் என்ன செய்ய முடிந்தது?

பூனை வளர்க்கத்தான் முடிந்தது...ப்பூ...!

# அ[illegible]ன்பிறந்தநாள்செப்டம்பர்15-ல்-கழகத்தின் வ[illegible]ணக்கொடி வான் முட்டப் பறக்கட்டும்

# பொதுச் செயலாளர் சுற்றுப்பயண விவரம்

20-9-80 ஆற்காடு
21-9-80 சேலம்

# சென்னை மாநகர கழகத் தோழர்கள் கவனத்திற்கு

தமிழின மக்களின் தனிப் பெருந்தலைவர் பேரறிஞர் அண்ணா அவர்களின் பிறந்தநாள் விழாவை 15-9-80 அன்று தொட்டு இருவார காலத்திற்கு மிகச் சிறப்பான வகையில் கொண்டாடுவது சம்பந்தமாக பொதுச்செயலாளர் அவர்கள் தலைமையில் 7-9-80 ஞாயிறு காலை 10-00 மணி அளவில் தலைமைக் கழகத்தில் ஆலோசனைக் கூட்டம் நடைபெறும்.

அவ்வமயம் சென்னை மாநகரக் கழகத் தொகுதி அமைப்பாளர்கள், எம். ஜி. ஆர். மன்ற தொகுதி அமைப்பாளர்கள், மகளிர் பிரிவு தொகுதி அமைப்பாளர்கள், தொழிலாளர் பிரிவு, மாணவர் பிரிவு, ஆகியவற்றைச் சேர்ந்த நிர்வாகிகள் ஆகியோர் கலந்துகொள்ள வேண்டுகிறேன்.

அன்புள்ள,
எம் எஸ் அப்துல்காதர்

# ப. உ. ச. கடிதம்

(1-ம் பக்க தொடர்ச்சி)

வகையில், அனைவரின் செவிகளிலும் பாய்ச்சிய பெருமைக்குரிய பெருந்தகையல்லவா அவர்?

**புதிய சகாப்தம் படைத்தவர்!**
**எளியோரை சொத்தாக மாற்றிய மாமேதை!**

அதன்மீது ஆதிக்கம் செலுத்த வந்த இந்திக்குத் தகுதியில்லை, உரிமையில்லை, அந்த அளவுக்கு அது உயர்ந்திடவில்லை என்று உணர்த்தி தன்னைத் தானே வருத்திக்கொண்டு தன் தொண்டர்களோடு சிறைகளை நிரப்பி வந்த ஆபத்தைத் தடுத்து நிறுத்திய தயாபரன் நமது அண்ணன்!

அண்ணாவின் ஆற்றல்மிகு தமிழ் 'இந்தியைக் கொண்டு வந்த' இராஜாஜியை, இந்தியைப் பரப்பத் துடித்த காங்கிரஸ் கட்சியின் பெருந்தூண் சிலம்புச் செல்வர் ம.பொ.சி. போன்றோரையெல்லாம் மாற்றி தமிழ் காக்கும் தளபதிகளாக ஆக்கியதை வரலாறு வருங்கால சமுதாயத்துக்குக் கூறும்!

உயர்ந்தோன், தாழ்ந்தோன் - பணக்காரன், ஏழை போன்ற பேதங்கள் அற பெண் அடிமை நீங்க, பகுத்தறிவு மலர, எதிலும் தமிழ் எங்கும் தமிழ் என்ற நிலை தோன்ற-இனத்தால் நாம் திராவிடர், மொழியால் தமிழர் என்று நாம் உணர, நம் கலைகள் புத்துயிர் பெற்று மலர அரும்பாடுபட்டவர் பிறந்த நாளன்றோ செப்டம்பர் பதினைந்து!

**'ஜிகினா' காகிதம்போல் 'ஜிகுஜிகு' வென்று ஜொலித்ததில்லை. ஆயினும் விலை மதிப்பில்லா வைரம் அவர்!**

**நிலவிற்கும், நட்சத்திரங்களுக்கும் ஒளி தரும் ஆதவனைப்போல் பலரை மின்னச் செய்தார் அழகாக பெருமையாக, உலாவரச் செய்தார். ஆனால் தன்னை ஏழைகளின் பிரதிநிதி என்றும், ஏழைகளின் சிரிப்பில் இறைவனைக் காணுகிறேனென்றும் கூறி பெருமைபட்டவர்-அவர் பிறந்த நாள் செப்டம்பர் பதினைந்து!**

நண்பர்களே அண்ணனின் பெருமையினை சொல்லச் சொல்ல இனிக்கும். கேட்கக் கேட்க சுவைக்கும் அவைகளைக் கேட்டாலோ, சொன்னாலோ அலுப்பு சலிப்பு தோன்றாது. ஆனால் உங்களிடம் கூறுவது கொல்லன் தெருவில் ஊசி விற்பது போலாகுமே என்று அஞ்சுகிறேன்.

'ரோஜா'வின் அழகை, 'மல்லிகை'யின் மணத்தை-தேனின் சுவையை தென்றலின் சுகத்தை குற்றாலத்துச் சாரலின் பெருமையை, பொதிகைமலைத் தென்றலை-பழனி பஞ்சாமிர்தத்தை அறிந்திருப்பதாலேயே அவைகள் போதும் என்று எவருங் கூறார்-அது போல்தான் அறிஞர் அண்ணா அவர்களைப் பற்றி கேட்பதுவும் என்று நீங்கள் சொல்வீர்கள். அவர் பிறந்த நாளையா எங்களுக்கு நினைவுபடுத்துகிறாய் என்று கோபப்படாதீர்கள்!

அந்தநாள் ''தமிழ் பிறந்தநாள்'' என்று மதிக்கத் தக்க நாள் என்று உங்களைப்போல நானும் உணர்கிறேன்.

**எளியோருக்குத் தென்றல்!**
**வலியோருக்கு புயல்!**
**இணைத்தவருக்கு நிலவு!**
**எதிர்த்தவருக்கு நெருப்பு!**
**அறிவில் பெருங்கடல்!**
**ஆற்றலில் இமயமலை!**
**தோற்றத்தில் எளியோன்!**
**ஏற்றங்கண்ட அறிஞன்!**

ஆம்...இப்படிப் பலப்பல பெருமைகளுக்கு உரியவரின் பிறந்த நாளாயிற்றே! எப்படி தமிழர்களால் மறக்க முடியும்? தமிழ் உணர்வுள்ளவர்கள் யாராக இருந்தாலும் இந்த நாளை மறக்க முடியாதே!

(தொடரும்)

அட்டை இல்லா நகரில் கட்டப்படும் வாசிய வீடுகளை டி. கே. கபாலி பார்வையிட்டார்.

ஆந்திராவில் வெடிகுண்டு தயாரிக்க பயிற்சிபெற்றவர்கள்

# நள்ளிரவில் பாழடைந்த பங்களாவில்ஒளிந்திருந்த நக்சல்பாரிகள் கைது

## ஒப்புதல் வாக்குமூலத்தில் திடுக்கிடும் தகவல்கள்

சென்னை, செப். 3-ஆந்திர மாநிலத்தில் உள்ள நக்சல்பாரி முகாமில் வெடிகுண்டு தயாரிக்கக் கற்றுக் கொண்டேன் என்று நேற்று மேலூர் கைது செய்யப்பட்ட இரண்டு நக்சல்பாரிகள் போலீசாரிடம் தங்கள் வாக்குமூலத்தில் கூறினர்.

திருப்பத்தூர் மாவட்டத்தில் நக்சல்பாரிகளை கைது செய்வதில் தமிழக போலீசார் தங்கள் உயிரை பணயம் வைத்து தீவிரமாக வேட்டையாடி வருகின்றனர்.

இரண்டு தினங்களுக்கு முன்பு வெடிகுண்டு வீச்சுக்கிடையே நக்சல்பாரிகள் தலைவர்களில்ஒருவரான மணி என்கிற மாட்டுகார மணியை போலீசார் கைது செய்து அவரால் கொள்ளையடிக்கப்பட்ட நகைகளையும் பொருட்களையும் கைப்பற்றினர்.

தொடர்ந்து போலீசார் நக்சல்பாரிகள் கும்பலை வலைவீசி தேடிவந்தனர்.

நேற்று இரவு திருப்பத்தூர் அருகில் உள்ள பொன்னேரி கிராமத்தில் இரண்டு நக்சல்பாரிகள் மறைந்திருப்பதாக போலீசாருக்கு தகவல் கிடைத்தது. உடனே போலீஸ் கோஷ்டி அந்த இடத்திற்கு விரைந்து சென்றது.

ஒரு பாழடைந்த வீட்டில் இருட்டு அறையில் நக்சல்பாரிகள் மறைந்திருப்பதை போலீசார் கண்டு பிடித்தனர்.

உடனே போலீசார் ஆயுதங்கள், வெடிகுண்டுகள் இருந்தால் உடனே அதை கீழே போட்டுவிட்டு எங்களிடம் சரணடையுங்கள் என்று அவர்களுக்கு எச்சரிக்கும் வகையில வானத்தை நோக்கி துப்பாக்கியால் சுட்டனர்.

உடனே இருட்டில் மறைந்திருந்தநக்சல்பாரிகள்'' எங்களைகாப்பாற்றுங்கள்'' எங்களை காப்பாற்றுங்கள், என்று அலறிக் கொண்டே வெளியே ஓடிவந்து போலீசாரிடம் சரணடைந்தனர். உடனே போலீசார் அந்த பாழடைந்த வீட்டில் சென்று வேறு யாராவது ஒளிந்து கொண்டு இருக்கிறார்களா என்று தேடிப் பார்த்தனர். அப்போது அந்த வீட்டில் தரையில் அரிவாள் கத்தி, கொடுவாள் போன்ற பயங்கர ஆயுதங்களைபோலீசார் கண்டு பிடித்து கைப்பற்றினர்.

கைதான இருவர்களில் ஒருவர் பெயர் ரஞ்சன், மற்றொருவர் பெயர் மணி என்கிற மிசாமணி.

மிசாமணி இரண்டு தினங்களுக்கு முன்பு கைது செய்யப்பட்ட மாட்டுக்கார மணியின் உறவினர் ஆவார்.

பண்ணங்குப்பம் என்ற கிராமத்தில் வெடிகுண்டுகளை வீசி கொள்ளையடித்த வழக்கு சம்பந்தமாக ரஞ்சனை போலீசார் தேடிவந்தனர்.

தற்போது கைதுசெய்யப்பட்ட ரஞ்சன் போலீசாரிடம் வாக்குமூலம் கொடுத்துள்ளார்.

இதற்கு முன்பு கைது செய்யப்பட்ட மாட்டுக்கார மணியும் போலீசாரிடம் வாக்குமூலம் கொடுத்துள்ளார்.

கைது செய்யப்பட்ட நக்சல்பாரிகள் போலிசாரிடம் வாக்குமூலமோ அல்லது எந்தவித தகவல்களையும் கொடுக்க மாட்டார்கள். இதுதான் அவர்கள் கூட்டத்தின் கொள்கை.

ஆனால் கைது செய்யப்பட்ட மாட்டுக்கார மணியும், ரஞ்சனும் போலீசாரிடம் வாக்குமூலம் கொடுத்துள்ளனர் நக்சல்பாரிகள் போலீசாரிடம் வாக்குமூலம்கொடுப்பது இதுவே முதல் தடவையாகும்:

இவர்கள் கொடுத்த வாக்குமூலம் போலீசில் ஒரு பெரிய திருப்பத்தை ஏற்படுத்தியுள்ளது. இதன் மூலம் நக்சல்பாரி கும்பல் அனைவரையும் விரைவில் பிடித்து விடலாம் என்று ஒரு உயர் போலீஸ் அதிகாரி தெரிவித்தார்.

ரஞ்சன் போலீசில் கொடுத்த வாக்குமூலத்தில் கூறியுள்ளதாவது:-

பண்ணங்குப்பம் வெடிகுண்டு கொள்ளைக்குப் பிறகு நான் ஆந்திரா மாநிலத்திற்கு சென்றேன் அங்கு ஒரு நக்சல்பாரி முகாமில் வெடிகுண்டு தயாரிப்பது வைத்திருப்பது போன்ற பயிற்சி பெற்றேன்.

என்னோடு பல மாநிலத்தில் இருந்தும் அங்கு பயிற்சி பெற வந்திருந்தனர். அந்த முகாமில் வெடிகுண்டு தயாரிப்பது பற்றியும், சித்தாந்த கல்வியைப் பற்றியும் பயிற்சி அளிக்கப்பட்டது அதன்பிறகு நான் அங்கிருந்து இங்குவந்து மாட்டுக்கார மணியோடு தொடர்பு கொண்டேன்.

இவ்வாறு ரஞ்சன் போலீசாரிடம் கொடுத்த வாக்குமூலத்தில் கூறியுள்ளார்.

அதன் மூலம் இவர்மாட்டுக்கார மணியோடு சேர்ந்து நக்சல் பாரியாக மாறினார்.

இவர்கள் இருவரும் கைது செய்யப்பட்டது குறித்து ஒரு உயர் அதிகாரி தெரிவித்த போது கூறியதாவது:

நக்சல்பாரிகள் கும்பல் இதுவரை பாதிக்குமேல் பிடிபட்டுள்ளது. மீதி உள்ளதையும் விரைவில் கைது செய்வோம் அவர்கள் இருக்கும் இடம் இப்போதுதெரியவந்துள்ளது. இனி இப்பகுதியில் நக்சல்பாரிகள் தலை எடுக்க மாட்டார்கள் அதற்கான நடவடிக்கையைபோலீசார் செய்து வருகின்றனர் எனவே பொதுமக்கள் பயமின்றி இருக்கலாம்.

நக்சல்பாரிகளைப் பற்றி ஏதாவது தகவல் கிடைத்தால் உடனே போலிசாருக்கு தெரிவிக்கலாம்.

இவ்வாறு அந்த அதிகாரி தெரிவித்தார்.

# முதல்வர் வேண்டுகோள்

(1-ம்பக்கத் தொடர்ச்சி)

கலவரத்தையும் நாட்டில் குழப்பமும் ஏற்பட அடிப்படையாக அமைகின்றன.

அத்தகைய மாபெரும் பொறுப்பை ஏற்றுள்ள நீங்கள் அனைவரும் என்னுடைய வேண்டுகோளை ஏற்று எனக்குப் பேச வாய்ப்பைத் தந்து இருக்கிறீர்கள்.

ஒரு வரலாற்றுக்கு எப்படி நீங்கள் சொந்தமோ அதுபோல உங்கள் எழுத்துக்கள் செய்திகள் எதிர்காலத்தில் உங்களுடைய அறிவு ஆற்றல் பயன்படுகின்றவிதத்தில் அமையும்.

உழைக்கும் பத்திரிகையாளர் என்றவகையில்எவ்வளவு பங்கு கொண்டு இருக்கிறீர்கள் என்பதை நான் கேள்விப்பட்டு இருக்கிறேன்.

## உரிமை உண்டா?

உங்கள் உழைப்பு சக்திக்கு ஏற்ப உரிமைபெற்று இருக்கிறீர்களா?

அப்படிப் பெற்று இருந்தாலஎங்கெங்கோ இருந்து வந்து மாநாடு நடத்த வந்திருக்கமாட்டீர்கள்.

இருந்த இடத்திலேயே இருந்து உத்திரவு போட முடியும் என்ற நிலையில் இருப்பீர்கள்.

ஒரு பிரச்சினை சிலரை ஒற்றுமைப் படுத்துகிறது. வேறு சில பிரச்சினை பிளவு படுத்துகிறது.

ஏழ்மையைப் பற்றி பேசும்போது எல்லோரும் ஒன்றுகிறார்கள்.

## பணம் படுத்தும் பாடு

பணத்தைப் பிரித்துக் கொள்வதானால் பிரிந்து போகிறார்கள்.

இதற்குநாம் அடிப்படைகளை உணர்ந்து நாட்டுக்கு எதைச் சொலவேண்டுமோ அதைச் சொல்ல வேண்டியகட்டாயத்திற்கு ஆளாகி இருக்கிறோம்.

தனி மனிதர் வருமானம் என்று சொல்கிறார்கள். தனி நபர் சராசரி வருமானம் என்ற கற்பனையில் நாம சஞ்சரிக்கிறோம்.

இரண்டு நாட்களுக்கு முன்பு டெல்லியில் நான் தேசிய வளர்ச்சிக் கவுன்சில் கூட்டத்தில் கூட இது பற்றிப் பேசினேன்.

லட்சக்கணக்கில் சம்பாதிக்கிறவர்களையும், வருமானமே இல்லாதவர்களையும் சேர்த்து சராசரி கணக்கிட்டு தனிநபர் சராசரிவருமானம்என்று சொல்கிறார்கள்.

## முதல்வர் கூறிய கதை

தமிழகத்தில் ஒரு கதை உண்டு.

வெளி நாட்டில் இருந்து ஒரு ஊருக்கு ஒருவர் புதிதாக வந்தார்,

அந்த ஊரைக் கடந்து பக்கத்து ஊருக்குப் போக அவர் நடுவில இருந்த நதியைக் கடக்கவேண்டியிருந்தது.

அதை எப்படி கடப்பது என்பதைத் தெரிந்து கொள்ள அதன் ஆழம் எவ்வளவு என்று தெரிந்து கொள்ள அங்கிருந்த ஒருவரிடம் அந்த நதியின் சராசரி ஆழம் எவ்வளவு என்று கேட்டார்.

அங்கிருந்தவர் அந்த நதியின் சராசரி ஆழம் மூன்றுஅடி இருக்கும் என்றார்.

ஊருக்குப் புதியவரான இவர் சராசரி மூன்று அடி ஆழம்தானே என்று தைரியமாக இறங்கினார். இறங்கிய பிறகு தான் ஆழம் தெரிந்தது. 13 அடி ஆழத்தில்சிக்கினார். அவருக்கு நீந்தத் தெரிந்து இருந்ததால் எப்படியோ தப்பி பிழைத்தோம் என்றுபெருமூச்சுவிட்டார்.

இதுபோல நதியின் சராசரி ஆழக் கணக்கு எடுத்ததுபோலத்தான்இப்போதும் தனிநபர் சராசரி வருமானத்தைக் கணக்கிடுகிறார்கள்.

இப்படிப்பட்ட அடிப்படையை வைத்துத்தான் திட்டங்களைத் தீட்டுகிறார்கள்.

எந்தெந்த மாநிலத்தில் தனிநபர் வருமானம் என்ன, எந்த மாநிலம் பின்தங்கி இருக்கிறது எந்த மாநிலம் முன்னேறி இருக்கிறது என்று கணக்கிட வேண்டியிருக்கிறது.

உங்கள் வருமானமும் இப்படித்தான் கணக்கிடப்பட்டதா! தெரியாது.

இப்படி இருப்பதில் எச்சரிக்கையாக இருக்கவேண்டும் என்று பணிவன்புடன் கேட்டுக்கொள்கிறேன்.

நீங்கள் எச்சரிக்கையாக இருக்கவேண்டியது உங்களுக்காக அல்ல; எங்களுக்காக.

ஏனெனில் நீங்கள் அப்படிக் கணக்கிட்டால்தான் எங்களுக்குக் கணக்குஒழுங்காக வரும்.

## அறிவுக் கூராக்கு

பணத்தை மட்டும் இப்படிக் கணக்கிட்டால் பரவாயில்லை. அறிவையும் தனிநபர் சராசரி என்று கணக்கிட்டால் என்ன ஆகும்?

தயவு செய்து அப்படிப்பட்ட நிலை உருவாகாமல் தடுத்து நிறுத்தி நாட்டுமக்களுக்கு நல்லதுசெய்யவும், மக்களின் அறிவு, ஆற்றலைப் பெருக்கவும் பணியாற்ற வேண்டும்.

உணவு உண்ட நேரத்தில் தனிநபர் சராசரி வருமான பிரச்சினையைமறந்து உண்டிருக்கிறோம் என்று நம்புகிறேன்.

உணவு சுவையாக இருந்ததா, இல்லையோ வயிறு நிரம்பச் சாப்பிட்டு இருப்பீர்கள் என்று நம்புகிறேன்.

நீங்கள் உண்ண முடியாத உணவு வகைகளைத் தரவில்லை ஆனால் நீங்கள் காணாத உள்ளத்தைக் காண தகுதி உள்ளவர்கள் ஆககிக் கொண்டு இருக்கிறீர்கள்.

இந்த மனத்தை எப்போதும் பெற இந்தத் தொடர்பு பெருகுவதற்கு வாய்ப்பு வசதி ஏற்படுத்தித் தர வேண்டும்.

## இந்திய ஒருமைப்பாடு

இந்தியத் துணைக் கண்டம் ஒருமைப்பாட்டுடன் இருப்பதற்கும் உயர்வதற்கும் உங்கள் பணி உதவ வேண்டும் அந்தப் பணி உங்கள் கையில் இருக்கிறது.

ஒருமைப்பாடு உங்கள் கையில் தான் இருக்கிறது.

இதனை தயவு செய்து மனதில் வைத்து நீங்கள் அந்த அந்த மாநில மக்களிடம் காட்ட உதவவேண்டும்.

குறைந்த அவகாசத்தில் எனது அழைப்பை ஏற்று வந்துள்ள உங்களை மீண்டும் அமைச்சரவை சார்பிலும், அதிகாரிகள் சார்பிலும் எங்கள் கட்சியின் பொதுச் செயலாளர் சார்பிலும் வேண்டிக் கேட்டுக்கொள்கிறேன்.

இந்த நட்பு நீடித்து எங்களுடன் கைகோர்த்து தோளோடு தோள் நிற்க உதவவேண்டும்.

இவ்வாறு முதல்வர் புரட்சித்தலைவர் கூறினார்,

புரட்சித்தலைவர் பேசி முடித்ததும் அனைத்துப் பத்திரிகையாளர்களும் பலமாக கைதட்டி தங்கள் மகிழ்ச்சியை வெளிப்படுத்தனார்கள்.

## டி. ஆர். ஆர். நன்றி

இந்திய உழைக்கும் பத்திரிகையாளர் சம்மேளன தலைவர் டி. ஆர். ஆர். முதல்வர் புரட்சித் தலைவருக்கு நன்றி தெரிவித்தார்.

பல்வேறு மாநிலங்களிலிருந்துவந்திருந்த பத்திரிகையாளருடனும் முதல்வர் புரட்சித்தலைவர் உரையாடினார்.

# கழக எம். பி. சவுந்தரராசன் ஜப்பான் - ஹாங்காங் பயணம்

சென்னை, செப்.3- மக்களவை கழக உறுப்பினர் நல்லவன் என்கிற சவுந்தரராசன் ஜப்பான் ஹாங்காங் ஆகிய நாடுகளில் சுற்றுப்பயணம் செய்கிறார்.

சிவகாசிமக்கள் சபைத் தொகுதிகளிலிருந்து தேர்ந்தெடுக்கப்பட்ட கழக உறுப்பினர் சவுந்தரராசன்.

இவர் சிவில் இண்டியா ஏவியேஷன் கமிட்டியில் உறுப்பினராக இருக்கிறார்.

ஜப்பான், ஹாங்காங் ஆகிய நாடுகளில் சுற்றுப் பயணம் செய்வதற்கு ஏர்-இண்டியாசார்பில்இவரை சிறப்பு விருந்தினராக அழைத்துள்ளனர்.

அந்த அழைப்பை ஏற்று இம்மாதம் 6ந்தேதி சவுந்தரராசன் ஜப்பான் செல்கிறார். ஜப்பானிலும் ஹாங்காங்கிலும் அவர் சுற்றுப்பயணம் செய்து விட்டு 11ந் தேதி தாயகம் திரும்புகிறார்.

## டோஸ்-1

வாக்குறுதிகளை நிறைவேற்றக் கோரி கழகம் ஆட்சிப் பொறுப்பேற்ற 3 மாதத்தில் போராட்டம் நடத்துகிறார் கருணாநிதி.

இப்படிப் போராட்டம் நடத்தக் கூடாது. அது தவறு என்கிறார் இந்திரா காங்கிரஸ் தலைவர் எம்.பி. சுப்பிரமணியம்.

அரிப்பெடுத்த கருணாநிதி அதையும் மீறுகிறார்.

**லட்சணம் இழந்த அண்ணாச்சி லட்சியக கூட்டு என்னாச்சு?**

# தமிழ்நாடு அரசு போக்குவரத்து கழக அண்ணா மேற்பார்வையாளர் சங்க பொதுக்குழு

வரும் 4ந்தேதியன்று வியாழன் மாலை 6 மணிக்கு ராயப்பேட்டையிலுள்ள கழகத் தலைமை நிலையத்தில் தமிழ்நாடு அரசு அனைத்துப் போக்குவரத்து கழகங்களின அண்ணா மேற்பார்வையாளர் சங்க பொதுக்குழு நடைபெறுகிறது. அனைவரும் தவறாமல் கலந்து கொள்ள வேண்டுகிறேன்.

ம. தேவராசன்
பொதுச் செயலாளர்
அண்ணா மேற்பார்வையாளர் சங்கம்

# கழக உறுப்பினர் அட்டை வழங்குதல்

கீழ்க்கண்ட ஊர்களுக்குச் சம்பந்தப்பட்ட அமைப்பாளர்கள் முகவரிக்கு உறுப்பினர் அட்டைகள் அஞ்சல் மூலமாக அனுப்பிவைக்கப்பட்டுள்ளன,

அமைப்பாளர்கள் உறுப்பினர் அட்டைகளை முறையாக கழக உறுப்பினர்களுக்கு உடனடியாக வழங்கிட வேண்டும்.

உறுப்பினர் அட்டைகள் வழங்குவதில் எவ்விதக் குறைபாடுகளும் இல்லாமல் செயல்படுவது அமைப்பாளர்களின் பொறுப்பாகும். வழங்க மறுத்தால் அமைப்பாளர்கள் மீது கடுமையான முறையில் ஒழுங்கு நடவடிக்கை எடுக்கப்படும் உறுப்பினர்கள் ஒவ்வொருவரும் உறுப்பினா அட்டையைப் பாதுகாப்பாக வைத்திருக்கவேண்டும்.

உறுப்பினர் சேர்க்கப்பட்டுள்ள உறுப்பினர் தாள்களையும் உரிய தொகையையும் உடனடியாக தலைமை நிலையத்திற்கு அனுப்பிவைக்குமாறு பொறுப்பானவர்களைக் கேட்டுக்கொள்கிறேன்.

எம். எஸ். அப்துல்காதர்
தலைமை நிலையச் செயலாளர்;

## மதுரை மாவட்டம்

சு இராமசந்திர கென்னடி - வாடிப்பட்டி
கூ செல்லப்பாண்டி - சோழவந்தான்
தி அ சங்கையா - தாதம்பட்டி
மு சுப்பிரமணியம் - நாச்சிகுளம்
எஸ் முனியாண்டி - கச்சிராயிருப்பு
க மாயாண்டி - மேலநாச்சிகுளம்
க ராசு - பொட்டல்பட்டி
என் முருகேசன் - சோழவந்தான்
கே எ மணியக்காரர் - 16-வது வட்டம்
செல்வம் - முந்துலாபுரம்
பி கே எம் லோகமணி - வெள்ளையம்மாள்புரம்
என எஸ் பாண்டியன் - குன்னப்பகவுண்டன்பட்டி
வே கருப்பையா - முருகனேரி
இ வீ ஆர் ராஜீ - கம்பம்
கே இராஜபாண்டியன் - காமயகவுண்டன்பட்டி
எச் எஸ் சாகுல் அமீது - ஊடலூா
ஆர் இராமமூர்த்தி - எம் செங்குளம்
ஊ பெருமாள்தேவர் - வி அம்மாபட்டி
பி எ லெனின் - பட்டிவீரன்பட்டி
ஆர் கிருஷ்ணன் - வத்தலக்குண்டு
எ வி தங்கமணி - 4 வது வட்டம்
கே மீனாட்சிசுந்தரம் - காளியப்பன்காம்பவுண்டு
பி எ ரத்தினசாமி - அக்கரைப்பட்டி
வி அழகர்சாமி - சங்காரெட்டிகோட்டை
கே நடேசன் - சின்னகவுண்டன்பட்டி
ஆர் கருப்பையா - எம் வெள்ளாளப்பட்டி

## புதுக்கோட்டை மாவட்டம்

மெ தட்சிணாமூர்த்தி - ஆவணத்தான்கோட்டை (மேற்கு)
சு சிதம்பரம் - சுப்பிரமணியபுரம்
சொக்கலிங்கம் - விஜயபுரம்
வீரஜெம்புலிங்கம் - சந்தைப்பேட்டை
வி சிவநாதன் - வாடிக்காடு
எ பி மெய்யநாதன் - திருநாலூர்
மா வீரையாகோனார் - மைவயல்
க தர்மலிங்கம் - நெய்வத்தளி
டி ஜெயராஜ் - 8வது வட்டம்
வெ முத்துசாமி - தெற்குநல்லிபட்டி
கு சிதம்பரம் நெடுங்குடி
எ வீரபத்திரன் - திருவப்பூர்
டி பெருமாள் - 10 வது வட்டம்
எம் கோவிந்தராசன் - சோத்துபாளை
ஆர் கிருஷ்ணமூர்த்தி - 12-வது வட்டம்
கோ காசிநாதன் - நம்பூருணிப்பட்டி
எஸ் எஸ் மணி - 18 வது வட்டம்
ஆர் முத்துசாமி - தொண்டமான் ஊரணி தெற்கு
எம் தேவகுருநாதன் - தென்னதிரையன்பட்டி
சு நீலமேகம் - மட்டையன்பட்டி
எஸ் ரகுபதி - புதுக்கோட்டை
எஸ் சத்தியமூர்த்தி - 15 வது வட்டம்
ஆர் ஞானவேல் - 9-வது வட்டம்
மு இராமசந்திரன் - 20-வது வட்டம்
இ சீனிவாசன் - இலுப்பூர்
மா பொன்னுசாமி - முத்துடையான்பட்டி
கே சக்திவேல் - பெருமாநாடு
வ சின்னப்பா - ஒருக்கூா
கோ துளசியப்பா - காட்டுக்காரம்பட்டி
மு ஆறுமுகம் - ஆயக்குடிவயல்
டி கிருஷ்ணன் - பாசிப்பட்டி
நா இராமகிருஷ்ணன் - மேலப்புதுவயல்
சு தேவராஜன் - கீரனூர்
நா சின்னையா - சிலுபபக்குடிபட்டி
எ துரைராசு - மேலப்பட்டி
வ மணிமாறன் - சேதுவயல்
எ சாமிக்கண்ணு - தெம்மாவூர்
எம் பி கிருஷ்ணன் - வைத்தூர்
சி ஆரோக்கியசாமி - திருமலைராயபுரம்
அ ராமன் - ஆரணிப்பட்டி (தெற்கு)
எம் மாரியப்பன் - கீரனூர்
கே என் அப்துல்ரஜாக - தெம்மாவூர்
மு பழனிசாமி - பாப்புடையாணபட்டி
எம் ஆர் சைவராசு - மலையடிப்பட்டி
எ சைவராசு - உடையாளிப்பட்டி
எம் எஸ் மரியசூசை - பெரியதம்பிஉடையான் பட்டி கிர
சி கணேசன் - புலியூர்
இரா தமிழ்மணி - குளத்தூர்
ஆர் சுப்பிரமணியன் - ஆரணிப்பட்டி
ஆர் சப்பாணிமுத்து - விராலிப்பட்டி
எம் பிச்சை - கந்தர்வகோட்டை
கோ வி ரெங்கசாமி - சுந்தன்பட்டி
பி பன்னீர்செல்வம் - நத்தமாடிபட்டி
கா சண்முகம் - காடவராயன்பட்டி
சி குழந்தைசாமி - புதுநகர்
வெ துரைமாணிக்கம் - ஆத்தங்கரைபட்டி
கே கிருட்டிணன் - நத்தமாடிபட்டி
எம் ரெங்கசாமி - துருசுப்பட்டி
எஸ் வெள்ளைச்சாமி - பாண்டிபத்திரம்

மற்ற மாவட்ட, தொகுதி, ஒன்றியங்களில் உள்ள கிளைகளுக்கு உறுப்பினர் அட்டைகள் அனுப்பப்பட்டு வருகின்றன.

---

### திருமணம்

சென்னை, செப். 3- சென்னை மண்ணடி எஸ். ராகவ செட்டியார் (ஷிப்பிங் கிளியரிங் ஏஜெண்ட்) குமாரன் எஸ்.ஆர்.ஆனந்த கிருஷ்ணனுக்கும் (இந்தோ மலேசியா ஷிப்பிங் ஏஜென்சி பி. லிட்.), சி. ஆர். பொன்னுசாமி செட்டியார் (காப்பி வியாபாரம்) பௌத்திரியும், சி. பி. குப்புசாமி செட்டியார் ஜேஷ்ட குமாரத்தியுமான ராஜேஸ்வரி என்கிற ராகிணிக்கும் சென்னை தங்க சாலைத் தெரு நெ. 243, 'கந்தகோட்டம் ஸ்ரீ முத்து குமாரசுவாமி தேவஸ்தான கல்யாண மண்டபத்தில்' செப். 5-ந் தேதி வெள்ளிக்கிழமை காலை 6-மணிக்கு திருமணம் நடைபெறுகிறது.

---

# எம். பி. எஸ். அறிக்கையை மீறிய இந்திரா காங்கிரசார் மீது நடவடிக்கை

## கோஷ்டி மோதல் வலுக்கிறது

சென்னை, செப். 3-தமிழக இந்திரா காங்கிரஸ் தலைவர் எம். பி. சுப்பிரமணியத்தின் அறிக்கையை மீறி இந்திரா காங்கிரசார் ஆர்ப்பாட்டம் நடத்தப்போவதாக அறிவித்ததை அடுத்து தமிழக இந்திரா காங்கிரசில் கோஷ்டி மோதல் வலுத்துள்ளது.

கழகத்தின் தேர்தல் வாக்குறுதிகளை நினைவுப்படுத்தி உண்ணாவிரதப் போராட்டம் நடத்தப் போவதாக கருணாநிதி அறிவித்துள்ளது தெரிந்ததே.

''ஆட்சிப் பொறுப்பேற்று 3 மாதகாலத்திற்குள், வாக்குறுதிகளை நிறைவேற்றக் கோரி போராட்டம் நடத்துவது எந்த வகையிலும்சரியானதல்ல'' என தி. மு. க. வின் கூட்டணி கட்சியான இந்திரா காங்கிரஸ் கட்சித் தலைவர் எம். பி சுப்பிரமணியம் அறிவித்துள்ளார்.

அண்ணா தி.மு.க.அரசை எதிர்த்து தமிழக இளைஞர் காங்கிரஸ் காரர்களும் போராட்டம் ஏதும் நடத்தக்கூடாது என்றும் எம். பி. சுப்பிரமணியம் கூறியிருந்தார்.

### எம்.பிக்கள் புறக்கணிப்பு

ஆனால் எம். பி. சுப்பிரமணியத்தின் அறிக்கையை தமிழ்நாட்டைச் சேர்ந்த இரண்டு இந்திரா காங்கிரஸ் எம் பிக்கள் உட்பட ஒரு கோஷ்டியினர் புறக்கணித்து விட்டனர்.

தமிழ் நாட்டில் சட்டம் ஒழுங்கு சீர்குலைந்து விட்டதாக கூறி இன்று இளைஞர் காங்கிரஸ் சார்பில் ஆர்ப்பாட்ட ஊர்வலம் நடத்தப் போவதாக அறிவிக்கப்பட்டிருந்தது.

இந்த ஊர்வலத்தை தமிழக இந்திரா காங்கிரஸ் எம்.பி.க்கள் இருவர் துவக்கிவைப்பதாகவும், அறிவிக்கப்பட்டிருந்தது.

### கோஷ்டி பூசல்

எம். பி. சுப்பிரமணியத்தின் அறிக்கையை மீறி இவர்கள் ஆர்ப்பாட்டம் நடத்துவது தமிழக இந்திரா காங்கிரஸ் கட்சியில் உள்ள கோஷ்டிப் பூசலை அதிகரித்துள்ளது.

ஆட்சிப் பொறுப்பிற்கு வந்து 3மாத காலத்திற்குள் போராட்டம் நடத்துவதா என இந்திரா காங்கிரஸ் கட்சியில் பலர் எதிர்ப்பு தெரிவித்துள்ளனர்.

இவ்வாறு போராட்டம் நடத்தும் இளைஞர் காங்கிரசார் மூப்பனார் ஆதரவாளர்களே என்றும்போராட்டம் நடத்தவேண்டாம் என்ற தலைவரின் அறிக்கையை

(3.ம் பத்தி பார்க்க)

(7ம் பத்தி தொடர்ச்சி)

மீறிய இவர்கள் மீது நடவடிக்கை எடுக்கப்படும் என்றும் சுப்பிரமணியத்தின் ஆதரவாளர்கள் எச்சரித்து இருந்தனர்.

இதன் எதிரொலியாக, ஊர்வலத்தை துவக்கி வைப்பதாக இருந்த எம் பிக்கள் இருவரும் குறிப்பிட்டபடி வரவில்லை.

திண்டிவனம் ராமமூர்த்தி, மணிவர்மா ஆகியோர் ஊர்வலத்தை துவக்கி வைத்தனர்.

எம் பி சுப்பிரமணியத்தின் எச்சரிக்கையையும் மீறி ஊர்வலம் நடத்தியதின் விளைவாக தமிழக இந்திரா காங்கிரசில் கோஷ்டி மோதல் வலுத்துள்ளது.

---

### டோஸ்-2

எங்கள் கூட்டணி வெற்றி பெற்றால் சர்க்கரை விலையைக் குறைப்போம் என்றனர் இந்திரா காங்கிரஸ்-தி மு க கூட்டணியினர்.

இந்தக் கருத்தை மேடைக்கு மேடை கருணாநிதி கூறினர்.

அவர்கள் அப்படிப் பேசியபோது தமிழகத்தில் சர்க்கரை விலை கிலோ ரூ. 2 30

இப்போது கண்ட்ரோல் விலை ரூ. 2-85.

கறுப்புச்சந்தையில் ரூ. 8.

சண்டைக்கு வரும் அண்ணாச்சி
சர்க்கரை விலை என்னாச்சு?

---

தியாகராய நகர் பகுதியில்

# குடிசைமாற்று வாரிய வீடுகளை டி. கே. கபாலி பார்வையிட்டார்

சென்னை, செப். 3- குடிசை மாற்று வாரியத்தால் கட்டப்பட்டுவரும் வீடுகளை வாரியத் தலைவர் டி. கே. கபாலி பார்வையிட்டு அப்பகுதி மக்களின் குறைகளைக் கேட்டறிந்தார்.

சென்னை நகரில் குடிசை மாற்று வாரியத்தின் சார்பில் கட்டி குடியேறும் தகுதியிலுள்ள வீடுகளையும் கட்டப்பட்டுவரும் வீடுகளையும் வாரியத் தலைவர் டி கே கபாலி எம்.எல்.ஏ. பார்வையிட்டார்.

ஏற்கனவே குடியிருந்து வரும் வீடுகளிலும் சுற்றுப் புறங்களிலும் உள்ள குறைகளை டி கே கபாலி கேட்டறிந்தார்.

அப்போது சென்னை மாநகராட்சி அதிகாரிகள் மின்துறை அதிகாரிகள் சென்னை பெருநகர் குடிநீர் வடிகால் வாரியத் துறை அதிகாரிகள் அவருடன் சென்றனர்.

தியாகராய நகர் பஸ் நிலையத்திற்கு அருகே கட்டப்பட்டிருக்கும லலிதாபுரம குடியிருப்பையும் அவர் பார்த்தார். அங்கு ஏற்கனவே கட்டப்பட்டிருக்கும் வீடுகளில் இருப்பவர்களிடம குறைகளை கேட்டறிந்தார் குடிசைமாற்று வாரியத்தின இடங்களில் நீண்ட நாட்களாக எடுக்கப் படாமலிருக்கும் குப்பைகளை எடுக்கும்படியும் பள்ளத்தில் அமைக்கப்பட்டிருக்கும குடிநீர் குழாயை உயரமான இடத்தில் அமைக்குமாறும அதிகாரிகளிடம டி கே கபாலி கேட்டுக் கொண்டார.

### போக் ரோடு

வடக்கு நியுபோக் ரோடு போக்குவரத்துக்கு ஏற்றதாக இல்லாமல் மோசமாக இருப்பதை அதிகாரிகளிடம் சுட்டிக் காட்டினார். ஜனவரி மாதத்திற்குள் இந்த சாலையை சரிப்படுத்துமாறு அதிகாரிகளைக் கேட்டுக்கொண்டார்.

லலிதாபுரம் பகுதியில் இன்னும் ஒரு வாரத்திற்குள் குடிசையிலிருப்பவர்களை அந்த வீடுகளில் குடியமர்த்தப்போவதாக அப்பகுதி மக்களிடம் டி கே கபாலி கூறினார்.

அக்டோபா மாதத்தில் குடியமர்த்த இருக்கும் வாழைத்தோப்பு பகுதி புதிய கட்டிடங்களை பார்வையிட்டு அங்கு சரிவர போடப்படாமலிருந்த சாலைகளை சீக்கிரம்போட்டு விடுமாறு அதிகாரிகளிடம் எடுத்துச் சொன்னார்.

ரெட்டிக்குப்பம் ரோடை பஸ் போக்குவரத்துக்கு ஏற்றதாக சீரமைக்குமாறு மாநகராட்சி அதிகாரிகளிடம டி. கே. கபாலி கேட்டுக் கொண்டார்.

### சாக்கடை

குடிசை மாற்று வாரிய வீடுகள் உள்ள பகுதிகளில் தேங்கி இருக்கும கழிவுகளையும் சாக்கடை நீரையும் வெளியேற்ற என்னென்ன நடவடிக்கைகளை மேற்கொள்ளலாம் என்று அதிகாரிகளிடம் ஆலோசனை நடத்தினா.

அசோக் நகர் ஆர் 3- காவல் நிலையம் பகுதியில் உள்ள குடிசை மாற்றுவாரிய வீடுகளை பார்வையிடச் சென்ற போது அந்த பகுதியில் உள்ள வீடுகளில் அடுப்பு எரிக்கும்போது புகை போவதில்லை என்று டி கே கபாலியிடம் முறையிட்டனர்,

அந்த வீடுகளுக்குள் சென்று அக்குறை உள்ள பகுதிகளைப்பார்த்தார்,

சிலகட்டிடங்களில் குளியலறை பகுதிகள் ஒழுகுவதாக சொன்னார்கள் அந்த பகுதிகளை விரைவில் சீரமைத்து தருவதாக டி கே கபாலி சொன்னார்.

### அட்டை இல்லா நகர்

சென்னை நகரில் கே கே நகர் பகுதியில் கட்டப்பட்டு வரும் அட்டையில்லா நகர் பகுதி கட்டடங்களை டி கே கபாலி பார்வையிட்டார.

அட்டையில்லா நகரில் கட்டப்படும் கட்டடங்களுக்கு சிமெண்ட் கலவை என்ன விகிதத்தில் போடப்படுகிறது என்றும் எப்போது இந்த வேலை முழுமையாக்கப்படும் என்றும் அங்கிருந்த அதிகாரிகளிடம் டி கே கபாலி கேட்டார்,

குடிசை மாற்றுவாரியப் பகுதிகளில் வாழும் மக்களும் சுற்றுப்புறத்திலுள்ள கழகத் தோழர்களும் ஆங்காங்கே திரளாக வந்திருந்து மாலை அணிவித்தனர்.

வாரியத் தலைவர் டி கே கபாலியுடன் உறுப்பினர்கள் கி எத்திராஜ், சைதை கண்ணன் மற்றும் அதிகாரிகள் சென்றனர்.

---

## பலர் அல்ல; ஒருவர் தான்!

பெரு விருப்பம் உள்ளவராம் பதவியில் பலபேர்-அவர் வேண்டாம்!

-கருணாநிதி பேச்சுக்கு முரசொலி தலைப்பு

பதவியில் விருப்பம் உள்ளவர் பல பேர்-என்பதே தவறு. தமிழக பொது வாழ்வில் பதவி ஆசை பிடித்து அலைவது ஒரே ஒருவர்தான். அவர் கருணாநிதி மட்டுமே!

---

## தி.மு.க.வின் உண்ணாவிரதம் கிறிஸ்துவ குடியரசு கட்சி கண்டனம்

சென்னை, செப். 3. தி.மு.க. நடத்தஇருக்கும் உண்ணாவிரதப் போராட்டத்தை கிறிஸ்துவ குடியரசுகட்சி கண்டித்து தீர்மானம் நிறைவேற்றியிருக்கிறது கிறிஸ்துவ குடியரசு கட்சியின் செயற்குழு எப். எஸ். ராய் தலைமையில் நடைபெற்றது.

3 மாதத்திற்குள் எந்த ஒரு அரசும் எல்லா வாக்குறுதிகளையும் நிறைவேற்றிட முடியாது, பிரதமர் இந்திராகாந்தியும் ஆட்சிக்கு வந்தால் விலைவாசியை கட்டுப்படுத்துவதாகக்கூறி 8 மாதங்கள் கடந்து விட்டன. விலைவாசி ''ஆரியப்பட்டா'' ''ரோகிணி'' வேகத்தில் ஏறுவதை கட்டுப்படுத்த மத்திய அரசை எதிர்த்துப் போராடுவதை விட்டுவிட்டு அரசியல் ஆதாயம் தேடவும் மக்களை திசை திருப்பவும் தி. மு. க. மேற்கொள்ளும் உண்ணாவிரதத்தை தவிர்க்க வேண்டும். இந்த நியாயமற்ற உண்ணாவிரதத்தை கிறிஸ்துவ குடியரசு கட்சி வன்மையாககண்டிக்கிறது

இவ்வாறு அந்தகூட்டத்தில் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

---

# காவிரி நீர் பங்கீடு: டெல்லியில் தென்னக முதல்வர்கள் மாநாடு

புரட்சித்தலைவர் கலந்துகொள்கிறார்

சென்னை, செப். 3- காவிரி நதிநீர் பங்கீடு பற்றி பேச்சுவார்த்தை நடத்த டெல்லியில் தென்னக முதல்வர்கள் மாநாடு 18 ஆம் தேதி நடக்கிறது தமிழக முதல்வர் புரட்சித்தலைவரும் கலந்து கொள்கிறார்.

காவிரி நதி நீரை தமிழ்நாடு,கேரளம்,கருநாடகம ஆகிய மாநிலங்கள் சமமாகப் பகிர்ந்துகொள்வது குறித்து இருந்த ஒப்பந்தம் 1974 ஆம் ஆண்டு காலாவதி ஆகிவிட்டது.

இதுவரை காவிரிநீர் பங்கீடுபற்றி அதன்பிறகு புது ஒப்பந்தம் எதுவும் ஏற்படவில்லை.

இது குறித்து பேச்சுவார்த்தை நடத்த வகை செய்யும்விதத்தில் தென்னக முதல்வர்கள் மாநாட்டை மத்திய அரசு கூட்டியுள்ளது.

இந்த மாநாடு வருகிற 18ஆம் தேதிவியாழனன்று டெல்லியில் நடக்கிறது.

### புரட்சித்தலைவர் செல்கிறார்

மாநாட்டில் கலந்து கொள்வதற்காக தமிழக முதல்வர் புரட்சித்தலைவர் 17ஆம் தேதி டெல்லிபுறப்பட்டுச் செல்கிறார்.

கருநாடகம், கேரளம், புதுவை மாநிலங்களைச் சேர்ந்த முதலமைச்சர்களும் இந்த மாநாட்டில் கலந்து கொள்கிறார்கள்.

### தொழிலாளர்நல அமைச்சர்கள் மாநாடு

தொழிலாளர் நல அமைச்சர்கள் மாநாடு 15,16 ஆகிய தேதிகளில் டெல்லியில் நடக்கிறது.

இந்த மாநாட்டில் தமிழக தொழிலாளர் நல அமைச்சர் இராகவானந்தம் கலந்து கொள்கிறா.

### விற்பனைவரி மாநாடு

விற்பனைவரி பற்றிய மாநாடு 16,17 ஆகிய தேதிகளில் டெல்லியில் நடக்கிறது.

இந்த மாநாட்டில் தமிழகத்தின் சார்பில அமைச்சர்கள் பண்ருட்டி ராமச்சந்திரன், எஸ் டி எஸ் ஆகியோர் கலந்து கொள்கிறார்கள்.

---

## மாணவர்களுக்கு பல்லவன் புதியஏற்பாடு

சென்னை, செப்,3 பல்லவன் போக்குவரத்துக் கழகம் மாணவர்களுக்கு சலுகை பயணச்சீட்டு வழங்கும் நேரத்தில் மாறுதலைச் செய்திருக்கிறது.

இதுவரை காலை 8மணி முதல் 10மணிவரை இயங்கிவந்தசலுகைபயணசீட்டு வழங்கும் கவுண்டர்கள் இனிமேல் காலை 8-30 மணிமுதல் 10 மணி வரையிலும் மாலை 3 மணி முதல் 8மணி வரையிலும் இயங்கும். திருவல்லிக்கேணியில் இயங்கி வந்த கவுண்டர் அண்ணா சதுக்கத்திற்கு மாற்றப்பட்டுள்ளது.

---

பல்லவன்

## அர்ச்சகத் தொழிலாளர் சங்கம்

சென்னை, செப்,3-போக்குவரத்து தொழிலாளர்களுக்கு வரலாறு காணாத வகையில் ஊதிய உயர்வு வழங்கிய முதல்வர்புரட்சி தலைவருக்கும் அமைச்சர் முத்துசாமிக்கும் பல்லவன் அச்சக பொதுத் தொழிலாளர் சங்கத்தின சார்பில சங்கத்தலைவர் ஏ. செல்லக்கண்ணு பாராட்டு தெரிவித்துள்ளார்.

# அண்ணா








## புலவர் அறிவுடைநம்பி நிகழ்ச்சிகள்

செப்டம்பர் 15 பெங்களூர் காந்திபுரம் தொகுதி, அண்ணா பிறந்தநாள்விழா தொடங்கி வைத்தல், 16, ஷிமோகா, பத்ராவதி பொதுக்கூட்டங்கள், 17 கோலார் தங்கவயல்- இந்த நிகழ்ச்சிகளில் கருநாடக மாநில அமைப்பாளர் சுந்தரம், மாநிலப் பொருளாளர் தாமரைச் செல்வன் ஆகியோரும் கலந்து கொள்கின்றனர்.



## டோஸ்-3

எங்கள் கூட்டணி ஆட்சிக்கு வந்தால் சிமெண்ட் தாராளமாக-ஏராளமாக மலிவாக கிடைக்கும் என்று இந்திராகாங்கிரசாரும், திமுகவினரும் சொன்னார்கள்
இன்று நிலை என்ன?
சிமெண்ட் விலை ஏறிவிட்டது.
சிமெண்டே கிடைக்கவில்லை.

**சிரிப்பாயும் அண்ணாச்சி சிமெண்டின் நிலை என்னாச்சு?**

## அமைச்சர் ஹண்டே தலைமையில் நடக்கும் திருமணம்

சென்னை, செப். 3- சென்னைப் பெருநகர் ஆதி ஆந்திரா நற்பணிக் கழகத் துணைச் செயலாளர் கே. பிரான்ஸிசுக்கும் ஏ ஜேசுதாஸின் மகள் சாராபாய்க்கும் வருகிற 5-ந் தேதி (வெள்ளி) மாலை 4 மணிக்கு வேப்பேரி தெலுங்கு பாப்டிஸ்ட் சர்ச்சில் பாதிரியார் ராஜ்குமார் முன்னிலையில் திருமணம் நடக்கிறது.

அமைச்சர் ஹண்டே தலைமை வகிக்கிறார். அமைச்சர்கள் எஸ் என் ராஜேந்திரன் கோமதி சீனிவாசன், சட்ட மேலவை உறுப்பினர் அனகாபுத்தூர் ராமலிங்கம், நாமக்கல் அருணாசலம் எம் எல் ஏ, இரா துரைராசன், காஞ்சி முனுசாமி மற்றும் பலர் மணமக்களை வாழ்த்திப் பேசுகின்றனர்.

## சீர்காழி

5.9.80 (வெள்ளி) காலை 8 மணிக்கு கச்சேரி ரோடில் மா ராமலிங்கம் தலைமையில் பேசுவோர்:

அமைச்சர் எஸ் டி எஸ் பாலசுப்பிரமணியன் எம் எல் ஏ நாகராசன் தமிழன்பன் கபூர் நடனம் ராசாராமன் குத்தூசு மற்றும் பலர்.



# போலிரேஷன் கார்டு வேட்டை: அதிகாரிகள் தீவிர நடவடிக்கை

## இதுவரை 3 ஆயிரம் கார்டுகள் பறிமுதல்

**சென்னை, செப். 3-போலி ரேஷன் கார்டுகளைக் கைப்பற்றுவதில் அதிகாரிகள் தீவிரமாக ஈடுபட்டுள்ளனர். இதுவரை 3 ஆயிரம் போலி கார்டுகள் சிக்கியுள்ளன.**

கடந்த 6 மாதத்தில் தமிழகம் முழுவதும் உணவு கடத்தல் பதுக்கல் தடுப்பு போலீசார் பல்வேறு இடங்களில் சோதனை நடத்தினார்கள்.

இதனால் ரூ 4 கோடி மதிப்புள்ள பதுக்கல் கடத்தல் உணவுப்பொருள்கள் கைப்பற்றப்பட்டன. ரூ 2 லட்சம் மதிப்புள்ள சிமெண்டு மூட்டைகள் கடத்தப்பட்டபோது அவற்றையும் போலீசார் கைப்பற்றினர்.

### போலி ரசீது

போலி ரசீது தயாரித்து சிமெண்டு கடத்தும் கும்பலை போலீசார் வலைவீசி தேடி வருகிறார்கள்.

பொய்யான பெயர்களில் ரேஷன் கார்டு தயாரித்து வினியோகிப்பது, கார்டுகளை அடமானம் பிடிப்பது போன்றவற்றையும் போலீசார் கண்டுபிடிக்க நடவடிக்கை எடுத்து வருகிறார்கள்.

சென்னை, மதுரை, திருச்சி, கோவை, கள்ளக்குறிச்சி ஆகிய இடங்களில் ஒரே நேரத்தில் போலீசார் திடீர் சோதனை நடத்தி 2741 போலி ரேஷன் கார்டுகளை கைப்பற்றினர்.

சென்னை நகரில் மட்டும் 883 அட்டைகள் கைப்பற்றப்பட்டன.

இதுசம்பந்தமாக உணவு கடத்தல் தடுப்பு போலீசார் 203 வழக்குகள் பதிவு செய்து 203 பேர்களை கைது செய்துள்ளனர்.

மதுரை காந்தி நகரைச் சேர்ந்த வியாபாரி தங்கசாமி போலி ரேஷன் கார்டு சம்பந்தமாக கைது செய்யப்பட்டார்.

# திருப்பதிசாமியின் உடல் நல்லடக்கம்: ஏராளமானோர் அஞ்சலி

**சென்னை, செப். 3- முதல்வர் புரட்சித் தலைவரின் நெருங்கிய நண்பரும் திரைப்படக் கலைஞருமான மறைந்த திருப்பதி சாமியின் உடல் நேற்று இரவு காசிமேடு மயானத்தில் நல்லடக்கம் செய்யப்பட்டது. இறுதிச் சடங்குகளில் அமைச்சர் பொன்னையன் கலந்து கொண்டார்.**

மறைந்த திருப்பதி சாமியின் இறுதிஊர்வலம் நேற்றிரவு புறப்பட்டது மலர்களாலும், மின்விளக்குகளாலும் அலங்கரிக்கப்பட்ட டிரக் வண்டியில் அவரது உடல் இடுகாட்டுக்கு கொண்டு செல்லப்பட்டது.

அமைச்சர் பொன்னையன் இறுதிஊர்வலத்திற்கு தலைமை வகித்தார். ஆயிரக்கணக்கானோர் இறுதி ஊர்வலத்தில் பங்கேற்றனர்.

சேலம் ஆறுமுகம் எம். எல். ஏ, போடி ராமதாஸ் இ மதுசூதனன், திருச்செங்காடு சேட் கவுண்டர், சந்திரன், சிவா, வாசு, ரே பெருமாள் உள்பட ஆயிரக்கணக்கான கழக, மன்ற, சார்பு மன்றச் செயல்வீரர்கள் இறுதி ஊர்வலத்தில் கலந்து கொண்டனர்.

இறுதி ஊர்வலம் கொல்லவார் அக்ரகாரம் சாலை கல்மண்டபம் சாலை, கடற்கரைச்சாலை வழியாக காசிமேடு இடுகாட்டை அடைந்தது.

பிறகு மறைந்த திருப்பதி சாமியின் உடல் நல்லடக்கம் செய்யப்பட்டது.

அமைச்சர் பொன்னையன் இடுகாடுவரை நடந்து வந்து இறுதிச் சடங்குகளில் கலந்து கொண்டார்.

முன்னதாக ஜேப்பியார் எம். எல்.சி., என்.எஸ். ராமதாஸ், நடிகர் தங்கவேலு, கு. க. செல்வம், தி. நகர் மூர்த்தி ஆகியோரும் கழகத் தோழர்கள் திரைப்படக் கலைஞர்கள் பலரும் மறைந்த திருப்பதி சாமியின் உடல் மீது மாலைகள் அணிவித்து இறுதி அஞ்சலி தெரிவித்தனர்.

குத்துசண்டை வீரர்கள் கழகம், தெலுங்கு மன்னசெட்டியார் சங்கம் சார்பிலும் மலர் வளையங்கள் வைக்கப்பட்டன.



Published by K.Ravindran on behalf of Thangamani Publications, 275, Avva Shanmugam salai, Madras-14 and printed by him at Print House, 1, First Main Road, United India Colony, Madras-24, Editor: E. PARASURAMAN.